حَسَدُ

# பொறாமை


ஹள்ரத் மௌலானா பீர்

துல்ஃபிகார் அஹ்மது சாஹிப்

நக்ஷபந்தி, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்


உருதுவில் நிகழ்த்திய சொற்பொழிவின் தமிழாக்கம்


**மொழிபெயர்ப்பாளர்**

ஹள்ரத் மௌலானா

முஹம்மது ஹிமாயத்துல்லாஹ் பாகவி



வெளியீடு

தாருஸ்ஸலாம் பதிப்பகம்

**S P PRiNTERS**

Chennai - 600 001

حَسَدُ

# பொறாமை

ஹள்ரத் மௌலானா பீர்

## துல்ஃபிகார் அஹ்மது சாஹிப்

நக்ஷபந்தி, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்

உருதுவில் நிகழ்த்திய சொற்பொழிவின்
தமிழாக்கம்

**மொழிபெயர்ப்பாளர்**

ஹள்ரத் மௌலானா

முஹம்மது ஹிமாயத்துல்லாஹ் பாகவி


வெளியீடு

தாருஸ்ஸலாம் பதிப்பகம்

**S P PRiNTERS**

#23 (NEW #38) Velayutham Street, Mannady, Chennai - 1
Tel : 044 - 2525 1920 Mob - 98401 95366, 99403 86166
E-mail : spprinters.ar@gmail.com

# நூல் விபரம்

நூலின் பெயர் : பொறாமை

சொற்பொழிவு : ஹள்ரத் மௌலானா பீர்
துல்ஃபிகார் அஹ்மது சாஹிப்
நக்ஷபந்தி, முஜத்திதீ தாமத்பரகாதுஹும்

தமிழில் : மௌலவி, ஹள்ரத்
முஹம்மது ஹிமாயத்துல்லாஹ் பாகவி

மொழி : தமிழ்

ஒளிஅச்சு : **S P PRiNTERS** Chennai - 1.

வெளியீடு : தாருஸ்ஸலாம் பதிப்பகம்

பதிப்புரிமை : தாருஸ்ஸலாம் பதிப்பகம்

முதல் பதிப்பு : ஹிஜ்ரி : 1436 - ஸஃபர்
கி.பி : 2014 - நவம்பர்

பக்கங்கள் : 48

நூல்தொடர்புக்கு : 044 - 2525 1920 : 98401 95366

# அட்டவணை

# மதிப்புரை

அல்லாஹ்வின் கிருபையால், சர்வதேச அளவில் மாபெரும் சீர்திருத்தப்பணி செய்து வரும் பெரியார்களில் ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாத்துஹூம் அவர்கள் குறிப்பிட்டு சொல்லப்பட வேண்டியவர்கள். பாவத்தின் காரணத்தால் துன்பத்தில் துவண்ட மனிதர்கள் ஹள்ரத் அவர்களின் சொற்பொழிவின் மூலம் தனக்குள் சீர்திருத்தத்தை ஏற்படுத்தி இன்பமான, பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் ஏராளம்.

பொதுமக்கள் மட்டுமின்றி அவர்கள் மற்றும் ஸாலிஹீன்கள் என அனைத்து தரப்பினரும் ஹள்ரத் மூலம் பயனடைந்துள்ளனர். பொறாமையின் ஆபத்து, அதை விட்டு எப்படி பாதுகாத்துக் கொள்வது என்ற தலைப்பில் ஹளரத் அவர்கள் ஆற்றிய அற்புதமான சொற்பொழிவை மௌலானா, மௌலவி முஹம்மது ஹிமாயத்துல்லாஹ் பாகவி ஹள்ரத் அவர்கள் அழகிய முறையில் தமிழாக்கம் செய்துள்ளார்கள்.

இன்டர்நெட் உலகில் வேகமாக சுழலும் மனிதன் வெளிரங்கத்தில் டீஸன்டான தீன்தாரியாக இருந்தாலும் அந்தரங்கத்தில் பொறாமை வஞ்சகம், குரோதம், பெருமை, மமதை போன்ற உயிர் கொல்லி நோய்களை சுமக்கும் வைரஸாக இருக்கின்றான்.

வயது வித்தியாசமின்றி சிறார்கள் முதல் மௌத்தை எதிர்பார்க்கும் குடுகுடு கிழவன் வரை அனைவரின் உள்ளத்திலும் சம்மனம் போட்டு உட்கார்ந்திருக்கிறது பொறாமை.

ஸஹாபாக்களும் பொறாமைப்பட்டவர்கள். ஆனால் நல்ல விஷயத்தின் பக்கம் ஆசை கொள்வதாக இருந்தது.

பணக்கார ஸஹாபாக்களெல்லாம் நல்ல பல அமல்களை செய்வதோடு தானதர்மங்களை செய்து

நன்மைகளை கொள்ளையடிப்பதை பார்த்து ஏழை ஸஹாபாக்கள் பொறாமைப்பட்ட சம்பவம் பிரபலமானதே!

அனஸ் (ரலி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் அமர்ந்திருந்தோம். இப்பொழுது உங்களிடத்தில் ஒரு சுவனவாசி வருதை தருவார் என்று நாயகம் (ஸல்) கூறினார்கள். அப்போது ஒரு அன்ஸாரித் தோழர் ஒளு செய்து, தாடியில் நீர் சொட்டிக் கொண்டிருக்கும் நிலையில் வந்தார். இடக்கையில் செருப்பை பற்றியிருந்தார்.

இவ்வாறே மூன்று நாட்கள் அவர் வருவதற்கு முன் நபி (ஸல்) சுபச்செய்தி கூற அந்த மனிதர் அதே கோலத்தில் வந்தார்.

சபை முடிந்தவுடன் அப்துல்லாஹ் இப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரலி) அவரை பின் தொடர்ந்து சென்று அவரிடம் நான் என் தந்தையிடம் வாக்குவாதம் செய்து விட்டேன். மூன்று நாட்களுக்கு அவரிடம் வரமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டேன். அந்தக் காலம் முடியும் வரை உம்முடன் தங்கிக் கொள்ள அனுமதிப்பீரா? என்று கேட்டார். அதற்கு அந்த அன்ஸாரித்தோழரும் ஒப்புக் கொண்டார்.

அப்துல்லாஹ் (ரலி) அவரிடம் 3 இரவுகள் தங்கினார். அந்த மனிதர் இரவில் எழுந்து வணங்கவில்லை. ஆனால் தூக்கத்தில் விழிப்பேற்பட்டு படுக்கையில் புரண்டபோது அல்லாஹ்வை நினைத்து தக்பீர் சொல்லிக் கொண்டார். இறுதியில் ஃபஜ்ரு தொழுகைக்கு எழுந்தார். நன்மையான விஷயங்களை மட்டுமே பேசினார். மூன்று இரவுகள் கடந்த பின்பு அவருடைய அமல்கள் குறைவானவை என்று கருதிய அப்துல்லாஹ் (ரலி) அவரிடம் சகோதரர்! எனக்கும் என் தந்தைக்குமிடையே கோபமோ, வெறுப்போ கிடையாது. எனினும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) மூன்று நாட்களாக இப்போது உங்களிடம் சுவனவாசி வருவார் என்று கூறியபோது மூன்று நாட்களும் நீங்கள்தான் வந்தீர்கள். அதன் காரணத்தை அறிய உம்முடன் தங்கினேன். ஆனால்

பெரிதாக ஒன்றும் தோன்றவில்லை. பிறகு எப்படி அந்த நற்பாக்கியத்தை அடைந்தீர் என்று கேட்டார். அதற்கு அவர் நீங்கள் கண்டதை தவிர வேறொன்றுமில்லை. எனினும் நான் எந்த முஸ்லிமையும் மோசடி செய்ய வேண்டுமென எண்ணியதில்லை. அல்லாஹ் வழங்கிய அருட்கொடைகளை கண்டு எவர் மீதும் பொறாமை கொண்டதில்லை என்று கூறினார்.

அதற்கு அப்துல்லாஹ் (ரலி) அதனால் தான் இத்தகைய உயர் பதவியை அடைந்தீர்கள். அதற்கு நாங்கள் சக்தி பெறவில்லை என்று கூறினார்கள்.

இஸ்லாமிய மார்க்க அளவு கோலின்படி மறுமையில் எடை மிகைத்தவர் யாரென்றால் உள்ளம் தூய்மை பெற்று, குரோதம், பொறாமை, வஞ்சகம், பகைமை போன்ற குணங்களிலிருந்து பரிசுத்தமாகி இருப்பவரே, அவருடைய வணக்க வழிபாடுகள் குறைவாக இருந்தாலும் சரி.

முஃமின்களே! ஈமானின் உள்ரங்கத்தை ஸ்கேன் எடுத்துப் பாருங்கள். ஓட்டைகளும், ஒட்டடைகளும் தெரிய வரும் என்கிறோம். ஆனால் நீங்களோ ஈமானின் வெளிரங்கத்தை கலர் ஜொரக்ஸ் எடுத்து லேமினேஷன் போட்டு பளபளப்பாகத்தானே இருக்கிறது என்கிறீர்கள்.

ஆகவே, பொறாமை என்ற நோயை அகற்ற இச்சிறு முயற்சியை அல்லாஹுதஆலா ஏற்றுக் கொண்டு, இதன் மூலம் பாவக்கறைகளை போக்கி பரவலான பயனை அனைவர்களும் அடைய தவ்ஃபீக் செய்வானாக! ஆமீன்.

மௌலானா, மௌலவி,

**அப்துர்ரஹ்மான்** ஃபாஜில் ரஹ்மானி

மதரஸா மஆரிஃபுல் ஹூதா

மஸ்ஜிதே மாமூர், சென்னை-1.

# மொழிபெயர்ப்பாளர் உரை

அல்லாஹுதஆலாவை வணங்குவதற்கென்றே படைக்கப்பட்ட மனிதவர்க்கம் ஷைத்தானின் சூழ்ச்சிகளில் சிக்குண்டு, வந்த நோக்கத்தை மறந்து, பல்வேறு துறைகளிலும் அல்லல்பட்டுக் கொண்டிருப்பது நாம் அனைவரும் அறிந்ததே!

ஷைத்தானின் சூழ்ச்சிகளில் மிகவும் மோசமானது பொறாமை ஆகும். இந்த வலையில் மனிதர்களை சிக்க வைத்து கோபம், குரோதம், குத்திக் காட்டுதல், சூனியம் செய்தல், முடிவாக கொலையும் செய்ய வைத்து விடுகிறான்.

இதற்கான முழு விபரங்களும் ஹள்ரத் ஷைய்கு பீர் துல்ஃபிகார் ஸாஹிப் தாமத் பரக்காத்துஹும் எழுதிய இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது.

இதை தமிழாக்கம் செய்ய வேண்டுமென்று என்று அன்பிற்குரிய மாணவர் அதிராம்பட்டினத்தைச் சேர்ந்த இப்னு அஹ்மது இப்ராஹீம் அவர்கள் கேட்டபோது எனது பல்வேறு மனமாச்சரியங்களுக்கு மத்தியில் இதன் முக்கியத்துவம் கருதி ஒப்புக் கொண்டேன். அவசர கதியில் முடிக்கவும் செய்தேன்.

இதை மௌலவி அப்துர்ரஷீத் காஷிஃபி மற்றும் இப்னு அப்துர் ரஹ்மான் அவர்களும் கடும் உழைப்புடன் திருத்தங்கள் செய்துள்ளார்கள்.

ஆயத்துகளுக்கான தர்ஜுமாக்கள் மட்டும் அ.கா. அப்துல் ஹமீது பாக்கவி (ரஹ்) மற்றும் சவுதி தர்ஜுமத்துல் குர்ஆனிலிருந்து எடுத்தாளப்பட்டது.

அல்லாஹுதஆலா இக்கொடிய நோயிலிருந்து நம்மை பாதுகாப்பானாக! ஈருலக நற்பாக்கியத்தை தருவானாக! ஆமீன்.

**முஹம்மது ஹிமாயத்துல்லாஹ்**
மேல்விஷாரம்

# வாழ்த்துரை

அல்லாஹ்வின் கிருபையால் ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாதுஹும் அவர்கள் சர்வதேச அளவில் மாபெரும் மார்க்கப் பணி செய்து வருகிறார்கள், தங்களுக்கிடையே குரோதம் கொண்டு சண்டை சச்சரவுகளில் சிக்கி வாழ்க்கையின் வசந்தத்தை இழந்த எத்தனையோ குடும்பங்கள் ஹள்ரத் அவர்களின் வாழ்க்கையை வளமாக்கி கொண்டுள்ளது,

பொறாமை என்பது மிகப்பெரிய கொடிய நோய். ஷைத்தான் ஆதம் (அலை) அவர்களின் சாபத்தையே பெற்று தூக்கி வீசப்பட்டான். “நெருப்பு விரகுகளை திண்று முடித்து விடுவதைப் போன்று பொறாமை நன்மைகளை திண்று தீர்த்துவிடும்” என (ஸல்) அவர்களும் கூறியுள்ளார்கள், பொறாமை உள்ளவன் ஒரு நிமிடம் கூட மன அமைதியோடு இருக்க முடியாது என்பதே உண்மை,

உங்கள் கைககளில் தவழும் இச்சிறிய நூல் பொறாமை என்ற தலைப்பில் ஹள்ரத் பீர் துல்ஃபிகார் ஸாஹிப் உர்தூவில் நிகழ்த்திய சொற்பொழிவின் தமிழாக்கமாகும். இதை ஹிமாயத்துல்லாஹ் பாகவி ஹள்ரத் அவர்கள் மிக அழகிய முறையில் எளிய நடையில் நமக்கு தமிழில் தந்துள்ளார்கள்.

இதனைப் படிப்பவர்களுக்கு அல்லாஹ் இக்கொடிய உயிர்கொல்லி நோயிலிருந்து விடுதலை அளிப்பானாக. (ஆமீன்) அல்லாஹுதஆலா இச்சிறிய முயற்சியை ஏற்று சமுதாயத்திற்கு பரிபூரணமாக பயனளிப்பானாக. (ஆமீன்).

**மௌலானா முஃப்தி ஷகீல் அஹ்மது நக்ஷபந்தி**
பேராசிரியர் மத்ரஸா பாக்கியாத்துஸ்ஸாலிஹாத்
வேலூர்

ஏக இறைவனால் இறக்கியருளப்பட்ட இனிய மார்க்கமான இஸ்லாம், மனிதன் செழிப்பான வாழ்க்கை வாழ வேண்டும் என்ற உயரிய நோக்கத்தில் அழகிய நெறிமுறைகளை நமக்கு வகுத்தளித்துள்ளது. மனிதனிடம் ஏற்படக்கூடிய அக, புற அனைத்து தீய செயல்களையும் தடுத்துள்ளது. அவற்றில் ஒன்றுதான் பொறாமை.

இன்றைய நவீன யுகத்தில் அனைத்து தரப்பு மக்களிடமும் பொறாமை என்னும் தீ மனதில் பற்றி எரிந்து கொண்டே இருக்கிறது. எவருக்கேனும் நலனை அபரிமிதமான அருட்கொடைகள் கொடுக்கப்பட்டு, அதைப் பார்த்து மற்றொரு மனிதனுக்கு சகிக்க முடியாமல் மனதில் ஏற்படுகின்ற தீயகுணம் தான் பொறாமையாகும்.

الحسد هو تمنى زوال نعمة عن صاحبها سواء
كان نعمة دين او دنيا

"ஒரு தோழருக்கு கிடைத்த, மார்க்கம் சார்ந்த அல்லது உலகம் சார்ந்த அருட்கொடைகள் அவரை விட்டும் நீங்கவேண்டும் என மற்றதோழர் விரும்புவதுதான் பொறாமை".

இஸ்லாமிய ஷரீஅத் இத்தீயகுணமான பொறாமையை பெரும்பாவம் என்று தடை செய்திருக்கிறது. பொதுமக்கள் இதனை உள்ளத்துடன் சம்பந்தப்பட்ட நோயாக கருதுகின்றார்கள். ஆனால் அது ஆன்மாவுடன் தொடர்புள்ள நோயாகும். இதனால்தான் அல்லாஹுதஆலா தனது திருமறையில் حسدا من عند انفسهم "அவர்களது மனங்களிலுள்ள பொறாமை காரணமாக" என்று கூறியுள்ளான்.

## அர்ஷின் முதல் பாவம்

அஜாஜீல் என்ற ஜின் பூமியின் மூலை முடுக்கெல்லாம்

ஸஜ்தா செய்து பல வணக்க வழிபாடுகள் புரிந்து, எல்லோரையும் விட பெரிய வணக்கசாலியாக மாறி, மலக்குமார்களின் ஆசானாக ஆகிவிட்டிருந்தான். அல்லாஹுதஆலா ஆதம் (அலை) அவர்களைப் படைத்து, "ஆதமுக்கு ஸஜ்தா செய்யுங்கள்" என்று மலக்குமார்களுக்கு உத்தரவிட்டான். அனைத்து மலக்குமார்களும் ஸஜ்தா செய்தார்கள். ஆனால் அஜாஜீல் என்ற இப்லீஸ் மட்டும் நின்று கொண்டே இருந்தான். அவனுக்கு இந்த விஷயம் கஷ்டமாக இருந்தது. "ஏன் ஸஜ்தா செய்யவில்லை" என்று அல்லாஹ் கேட்டதற்கு "நான் அவரைக்காட்டிலும் மிகச் சிறந்தவன்" என்று கூற ஆரம்பித்தான்.

ஆதம் (அலை) அவர்களுக்கு கிடைத்த இந்த சிறப்பான கண்ணியத்தை இப்லீஸினால் சகிக்க முடியவில்லை. பொறுக்க முடியவில்லை. இந்த கண்ணியம் தனக்கல்லவா கிடைக்க வேண்டும். நேற்று வந்த ஆதமுக்கு கிடைத்து விட்டதே என்று பொறாமை ஏற்பட்டதின் விளைவாக அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் தனது தர்பாரிலிருந்து இப்லீஸை தூக்கி எறிந்து விட்டு "உன்மீது கியாமத் நாள்வரை எனது சாபங்கள் தொடரும்" என்று கூறினான்.

அர்ஷிம் மீது ஏற்பட்ட முதல் பாவமே பொறாமைதான். இந்த பொறாமையினால்தான் மலக்குமார்களின் ஆசானாகத் திகழ்ந்தவன் அல்லாஹ்வின் சாபத்தைப் பெற்று அவனது தர்பாரிலிருந்து தூக்கி எறியப்பட்டான்.

# பூமியின் முதல் பாவம்

மனித வரலாற்றில் முதன் முதல் குற்றம் மற்றும் நிகழ்வு பொறாமைகள் காரணமாக ஏற்பட்டது.

ஆரம்பகாலத்தில் ஆதம் (அலை) அவர்களின் பிள்ளைகள் ஒரே பிரசவத்தில் ஒரு ஆண், ஒரு பெண் என

இரட்டைக் குழந்தைகளாகவே பிறப்பார்கள். மனித இன வளர்ச்சிக்காக அக்காலத்தில் அல்லாஹ் ஏற்படுத்தியிருந்த ஷரீஅத் சட்டம் என்னவெனில் ஒரு பிரசவத்தில் பிறந்த ஆண் மற்றொரு பிரசவத்தில் பிறந்த பெண்ணுடனும் (சம்பந்தம் செய்வதற்கு அக்காலத்தில் வேறு எந்த குடும்பமும் கிடையாதல்லவா?) அதனுடன் பிறந்த பெண் மற்ற பிரசவத்தின் ஆணையும் திருமணம் முடிக்க வேண்டும் என்பதாகும்.

காபில் மற்றும் ஹாபில் இருவரும் சகோதரர்கள். காபிலுடன் ஒரே பிரசவத்தில் பிறந்த பெண் அழகானவர். அவளை ஹாபிலுக்கு மணமுடித்து கொடுக்காமல் தானே அடைய காபில் விரும்பினார். அவர் உள்ளத்தில் ஹாபில் மீது பொறாமை உண்டானது.

பாருங்கள்! ஒரு அடியாருக்கு (ஹாபிலுக்கு) கிடைத்த அருட்கொடை மற்றொருவருக்கு (காபீலுக்கு) சகிக்க முடியாமல் போய்விட்டது. காபீல் தன் சகோதரருடன் பொறாமைக் கொள்ளத் தொடங்கினார். இந்த பொறாமை அவரை கொலை செய்யவும் காபீலைத் தூண்டியது. உன்னைக் கொலை செய்யப் போகிறேன் என்று ஹாபிலிடமே நேரடியாக சொல்லிவிட்டார். அந்த சகோதரரோ மிக நல்லவராயிருந்தார். எனவே,

لَئِنْ بَسَطْتَّ اِلَیَّ یَدَكَ لِتَقْتُلَنِیْ مَاۤ اَنَا بِبَاسِطٍ یَّدِیَ
اِلَیْكَ لِاَقْتُلَكَ ۚ اِنِّیْۤ اَخَافُ اللّٰهَ رَبَّ الْعٰلَمِیْنَ۝۲۸

"நீ என்னைக் கொலை செய்ய என்பால் உன்கையை நீட்டினால் நான் உன்னைக் கொலை செய்ய என் கரத்தை நீட்டப் போவதில்லை. நான் ரப்புல் ஆலமீனான அல்லாஹ்வை பயப்படுகிறேன்" என பதிலளித்தார்.

இப்பொழுது கவனியுங்கள்! யாரிடத்தில் அருட்கொடை உள்ளதோ பொதுவாக அவர் அல்லாஹ்வை பயப்பட வேண்டும். ஆனால் இந்த அறியாதவர் "உன்னைக் கொலை செய்வேன்" என்றதோடு கொலையும் செய்துவிட்டார். இந்த நிகழ்ச்சியை குர்ஆன் மஜீதில் அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் கூறியுள்ளான். மனித வரலாற்றில் இது முதல் செயலாகும். இந்த பாவத்தின் காரணம் பொறாமையாகும்.

# பொறாமையின் அடையாளங்கள்

ஒரு பாவம் அர்ஷில் நடந்தது. அதன் காரணமும் பொறாமை. மற்றொரு பாவம் பூமியின் மீது நிகழ்ந்தது. இதன் காரணமும் பொறாமை. பிறகு இந்த பொறாமை மேற்கொண்டு நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. காபிலுடைய தன்மை கொண்ட அனைத்து மனிதர்களும் இதில் பங்கெடுத்தனர். சிலருக்கு சிலரின் செல்வ நிலை கண்டு பொறாமை. சிலரின் கல்வியை கண்டு பொறாமை. சிலரோ செயல்பாடுகளைக் கண்டு பொறாமை. சிலருடைய பிள்ளைகள் நல்லவர்களாயிருப்பது கண்டு பொறாமை. சிலருடைய ஆரோக்கியத்தின் மீது பொறாமை.

ஒரு மனிதருக்கு அல்லாஹ்வின் இன்ன அருட்கொடை இருக்கிறது. அது மற்ற மனிதருக்கு கெட்டதாக தோன்றுகிறது. மேலும், அவர் மனதில் நிம்மதியின்மையும், வயிற்றில் பிசையையும் ஏற்படுத்துகிறது. அவரால் சகிக்க முடியவில்லையெனில் இவர் ஆன்மிக ரீதியில் நோயாளியாவார். இப்படிப்பட்ட (**Symptoms**) அடையாளங்கள் உள்ளதெனில் அந்த நோயைத் தான் பொறாமை என்கின்றனர்.

நமது பெரியார்கள் தங்களது நூல்களில்

எழுதியுள்ளார்கள். பொறாமையின் அடையாளங்களில் ஒரு அடையாளமாவது:- யார் மீது பொறாமை ஏற்பட்டுவிட்டதோ அவருக்கு ஏதேனும் சோதனை வந்துவிட்டால், ஏதாவது மோசமான நிலை ஏற்பட்டுவிட்டால் இந்த பொறாமைக்கார மனிதன் சந்தோஷம் கொண்டாடுகிறார். ஆம் அவனுக்கு வேண்டும். நன்றாக மாட்டிக் கொண்டானா? என்று.

கஷ்டத்தை பார்த்து மகிழ்பவர் அவரே அபாயத்தில் உள்ளார். சில நேரம் அல்லாஹுதஆலா அந்த கஷ்டப்படுபவரின் கஷ்டத்தை போக்கிவிடுகிறான். இந்த பொறாமைக்காரருக்கு கஷ்டத்தை கொடுத்து விடுகிறான். இதனால் பொறாமைக்காரர்கள் கஷ்டத்திற்குள்ளாக்கப் படுகிறார்கள்.

ஒரு அறிஞர் கூறினார்:- பொறாமைக்கு கண்கள் இல்லை. ஆனால் காதுகள் மிகப் பெரியவையாகும். எனவே, அந்த மனிதரைப் பற்றிய சின்னஞ்சிறிய விஷயம் பேசப்பட்டாலும் இவருடைய 'பிக்அப்' மிக அதிகமாக ஏற்படும். பொறாமைக் காது உடனே இது அவரை பற்றிய (தான் பொறாமைப் படுபவரைப் பற்றிய) சிக்னல் என்று புரிந்துக் கொள்கிறது.

## யூதர்களின் பொறாமை

இந்த பொறாமையின் பூரண வெளிப்பாடு நம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித காலகட்டத்தில் ஏற்பட்டது. மேலும், இந்த பொறாமை யூதர்களுக்கு உண்டானது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வருகைக்கு முன் மூன்று விதமான மக்கள் இருந்தார்கள். முதலாவது கூட்டம் யூதர்கள். இவர்கள் கல்வியாளர்களாயிருந்தனர். அவர்களிடம் வேத அறிவு இருந்தது. தங்கள் காலத்திய மௌலவிகளாகவும், முஃப்திகளாகவும் திகழ்ந்தனர். மக்கள் வந்து அவர்களிடம் பிரச்சனைகளைச் சொல்வார்கள். ஆனால் கல்வியின்

காரணமாக அவர்களுக்குள் பெருமை வந்துவிட்டிருந்தது. யூதர்கள் அதிக கல்விஞானம் பெற்றிருந்தனர். மேலும் தங்கள் பற்றி

"நாங்கள் அல்லாஹ்வின் பிள்ளைகள். மேலும், அவனது நேசர்கள்" என்று கூறுவார்கள்.

இரண்டாம் கூட்டத்தினர் கிருஸ்துவர்கள். இவர்களுக்கு சுய ஆட்சி இருந்தது. **(Established)** முன்னேற்றமடைந்த வாழ்க்கை வாழ்ந்துக் கொண்டிருந்தார்கள்.

மூன்றாம் கூட்டத்தினர் முஷ்ரிகுகள் (இணைவைப்பாளர்கள்) ஆவர். அரேபிய தீபகற்பத்திலே வாழ்ந்தார்கள். இவர்கள் சிலைகளை வணங்கி வந்தனர். இப்பொழுது இம்மூன்று பிரிவினரில் யூதர்களிடமிருந்த தவ்ராத் வேதத்தில் இறுதி நபியின் வருகையின் முழு அடையாளங்களும் எழுதப்பட்டிருந்தன. மேலும், 'அவர்' எப்பொழுது வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அவரது வருகையால் தம்மீது வெற்றிகள் மற்றும் அபிவிருத்திகளின் வாசல்கள் திறக்கும் என எண்ணினர்.

தவ்ராத் வேதத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வருகையின் அடையாளங்கள் முழுவதுமாக கூறப்பட்டிருந்தன. இன்ஜீலிலும் கூறப்பட்டிருந்தன.

எனவே, அவர்கள் இந்த அடையாளங்களை படித்துப் பார்த்துவிட்டு ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வரும் திசையை முன்னோக்கி காத்திருந்தனர். கவனியுங்கள்! யூதர்களின் எல்லா ஊர்களும் மதீனாவை சூழ இருந்தன. அவர்களின் வேதம் தவ்ராத் இறுதி நபி வருவதாயின் அந்த அடையாளங்களுடன் இந்த பகுதியில்தான் வருவார்கள் என்று காட்டிக் கொண்டிருந்தன. எனவேதான் அவர்கள் மதீனாவிலும் பனூகுரைழா கிளையினர் மதீனாவின்

சமீபமாகவும் குடியிருந்து வந்தனர். உண்மையில் இவர்கள் நபியின் வருகையைத் தான் எதிர்பார்த்துக் காத்திருந்தனர். எந்த அளவிற்கென்றால்

وَكَانُوا مِنْ قَبْلُ يَسْتَفْتِحُونَ عَلَى الَّذِينَ كَفَرُوا ۚ

தர்ஜுமா : "இதற்கு முன் (இதன் பொருட்டால்) அவர்கள் காபிர்களின் மீது வெற்றியைத் தேடிக் கொண்டிருந்தனர்".

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரக்கத்தால் காபிர்களுக்கு எதிராக "யா அல்லாஹ்! அவரின் பரக்கத்தின் பொருட்டால் எங்களுக்கு வெற்றியை வழங்குவாயாக!" என்று உதவி தேடிக் கொண்டிருந்தனர். தவ்ராத்தில் 'அந்த குழந்தை பிறக்கும் சமயத்தில் ஒரு சிகப்பு நட்சத்திரம் வெளிப்படும்' என்று ஒரு அடையாளம் சொல்லப்பட்டிருந்தது. இதையும் அவர்கள் எதிர்பார்த்தனர். அல்லாஹ்வின் மாட்சிமையால் சிகப்பு நட்சத்திரம் வெளிப்பட்ட போது யூதர்களின் எல்லா வீடுகளிலும் குதுகலம் கரைபுரண்டது. அவர்களின் ஆட்கள் 'எந்தெந்த வீடுகளில் குழந்தை பிறப்பு சமீபமாயுள்ளது' என்று கணக்கெடுக்க கூறினார்கள். 'மதீனா முழுவதிலும் எத்தனை பெண்கள் கர்ப்பமாயுள்ளனரோ அனைவரின் டெலிவரியும் (பிரசவகாலமும்) தூரமாயுள்ளது. இன்னும் வெகு நாட்கள் உள்ளன' என்பது தெரியவந்தது. பெரும் குழப்பத்திற் குள்ளானார்கள். கடைசியில் நபியின் பிறப்பு மதீனாவில் இல்லை எனில் வேறு எங்குதான் நடக்கும்? என்று பின்பு மக்காவில் தேடிபார்க்கலாம் என்று எண்ணினார்கள். தங்கள் ஆட்களின் மூலம் மக்காவில் தேடியபோது அது அக்காலத்தில் ஒரு சின்னஞ்சிறு கிராமமானதால் செய்தி பரவி நிறைய கர்ப்பிணி பெண்கள் ஆவலோடு எதிர்பார்த்தனர். ஆனால் எல்லாப் பெண்களின் பிரசவ தேதிகளும் மிகத் தள்ளிப் போயின. அப்துல் முத்தலிபின்

குடும்பத்தைச் சேர்ந்த அப்துல்லாஹ் அவர்களின் மனைவியான ஆமினா என்ற ஒரே ஒரு பெண்மணியுடைய பிரசவம் மட்டும்தான் சமீபமாயிருந்தது. யூதர்களுக்கு இது தெரிய வந்தபோது அவர்களின் வீடுகளுக்குள்ளே துக்கம் கரை புரண்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அவர்களுக்கு பொறாமை ஏற்படத் தொடங்கியது.

## பொறாமையின் காரணம்

பொறாமை ஏன் உண்டானதெனில் யூதர்கள் இஸ்ஹாக் (அலை) அவர்களின் வம்சவழி வந்தவர்களாயிருந்தனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வமிச பாரம்பரியம் இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழிவந்தது. இந்த இருவரும் ஹழரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் மகன்களாவர். யூதர்கள் தாங்கள் தான் அல்லாஹ்வுக்கு மிகப் பிரியமானவர்கள். அல்லாஹ்வின் பிள்ளைகள். எனவே தங்கள் பரம்பரையில்தான் இறுதி நபி தோன்றுவார்கள் என்று நம்பிக் கொண்டிருந்தனர். ஆனால் இஸ்மாயீல் (அலை) அவர்களின் வமிசத்தில் இறுதி நபி தோன்ற இருக்கிறார் என்று அவர்களுக்கு தெரியவந்த போது 'இந்த அந்தஸ்த்து, இந்த அருட்கொடை நமது பாரம்பரியத்திற்கல்லவா கிடைத்திருக்க வேண்டும்' என்று பொறாமை தொடங்கிவிட்டது.

ஏனெனில் பொறாமையின் அடிப்படையே, ஒரு அடியான் ஒரு அருட்கொடைக்கு தானே தகுதிவாய்ந்தவர் என்று நினைத்துக் கொண்டிருப்பதாகும். உண்மை நிலையோ பங்கு வைத்தல் அல்லாஹ்விற்குரியது. அவன் தன் அடியார்களில் யாருக்கு நாடுகிறானோ கொடுத்து விடுகிறான். எனவே, அவன் அல்லாஹ்வின் இந்த பங்கு வைத்தலின் மீது திருப்தியுறுவதில்லை. அவனுக்கு ஏன் இந்த அருட்கொடை என்று சொல்கிறான். அதன் காரணமாக அந்த அடியானின்

உள்ளத்திற்குள் ஒரு நெருப்பு பற்றி கொள்கிறது. இந்த நெருப்பு பற்றி கொள்வதன் பெயர் தான் பொறாமை ஆகும். முடிவாக அந்நேரத்திலிருந்தே யூதர்களுக்கு முஸ்லிம்களின் மீது ஒரு 'பொறாமை' இருந்து வந்தது.

அவர்களின் நபிமார்களோ "யா அல்லாஹ்! எந்த இறுதி நபியை பற்றியும், அவர்களின் தோழர்களைப் பற்றியும் அவர்களுக்கு நீ அருள இருக்கும் அருட்கொடைகளைப் பற்றியும் நீ கூறிவருகிறாயே அந்த அருட்கொடைகளை அல்லாஹ்வே! எங்களுக்கும் வழங்குவாயாக!" என்றுதான் துஆச் செய்து வந்தார்கள்.

وَاكْتُبْ لَنَا فِىْ هٰذِهِ الدُّنْيَا حَسَنَةً وَّ فِى الْاٰخِرَةِ اِنَّا هُدْنَآ اِلَيْكَ ۚ

தர்ஜுமா : "மேலும், இவ்வுலகத்தில் எங்களுக்கு அழகானதை நீ விதித் தருள்வாயாக! மறுமையிலும் (அழகானதை நீ விதித் தருள்வாயாக!) நிச்சயமாக நாங்கள் (தவ்பாச் செய்து) உன்னளவில் மீளுகிறோம்".

ஆனால் அல்லாஹுதஆலா "இந்த அருட்கொடைகள் இந்த அந்தஸ்த்து, இந்த நற்பாக்கியங்கள், என்னுடைய நேசரை பின்பற்றக் கூடியவர்களுக் காகும்" என்று கூறிவிட்டான்.

اَلَّذِيْنَ يَتَّبِعُوْنَ الرَّسُوْلَ النَّبِىَّ الْاُمِّىَّ الَّذِىْ
يَجِدُوْنَهٗ مَكْتُوْبًا عِنْدَهُمْ فِى التَّوْرٰىةِ وَالْاِنْجِيْلِ ۚ

தர்ஜுமா : "அவர்கள் எத்தகையோரென்றால் உம்மீ (எழுதப்படிக்கத்தெரியா) நபியாகிய (நம்) ரஸுலைப் பின்பற்றுவார்கள். அவர் தௌராத்திலும், இன்ஜீலிலும் (அவருடைய பண்புகள்) எழுதப்பட்டுள்ளவராக அவரை அவர்கள் காணுவார்கள்".

இது ஸஹாபாக்களைக் குறிக்கிறது. இப்போது விஷயமே வேறாகிவிட்டதே என்று யூதர்களுக்கு தெரிய வந்த போது அவர்களது உள்ளங்களில் கோபமும் குரோதமும் பொறாமையும் குடியேறிவிட்டன. அல்லாஹ்வும் இதை தெளிவுபடுத்திவிட்டான்.

لَتَجِدَنَّ اَشَدَّ النَّاسِ عَدَاوَةً لِّلَّذِيْنَ اٰمَنُوا الْيَهُوْدَ

தர்ஜுமா : “முஃமின்களுக்குப் பகைமையில் கடினமானவர்களாக மனிதர்களில் யூதர்களையும், முஷ்ரிக்குகளையும் (நபியே!) உறுதியாக நீர் காண்பீர்”.

அவர்கள் “உள்ளிருந்து அனைத்து அடையாளங் களும் பூர்த்தியடைந்து விட்டன” என்பதை தந்தை தன் மகனைத் தெரிந்து கொள்வதைப் போல் தெரிந்து கொண்டனர்.

يَعْرِفُوْنَهٗ كَمَا يَعْرِفُوْنَ اَبْنَآءَهُمْ ؕ

தர்ஜுமா : “எவர்களுக்கு நாம் வேதங் கொடுத்தோமோ அத்தகையோர் தங்கள் மக்களை அறிவது போல் அவரை (நபியை) அறிவார்கள்”.

ஆனால் அறியாமைக் கால வரட்டு ரோஷத்தின் காரணமாக அவர்கள் இந்த யதார்த்தத்தை ஒப்புக் கொள்ளவில்லை. முடிவாக அகிலத்திலே பொறாமையின் இப்படிப்பட்ட உதாரணமே எங்கும் கிடைக்க முடியாத அளவுக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மற்றும் அவர்களின் தோழர்களின் மீது பொறாமை உண்டானது. எனவே, பொறாமையிலே அவர்கள் என்னதான் செய்யவில்லை! நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சுவற்றின் நிழலிலே அமர்ந்தால் அவர்களை ஷஹீதாக்குவதற்காக அம்மிக்கல் போடப்பட்டது. சாப்பிட

விரும்பிய பொழுது ஆட்டுக்கறியில் விஷத்தை கலந்து அனுப்பினார்கள். ஒன்றும் பலிக்காத போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நஷ்டத்தை உண்டாக்க சூனியமே செய்தார்கள். நூல்களில் மந்திரங்கள் ஓதி முடிச்சுகள் போட்டு கிணற்றடியில் கற்களுக்கு கீழே புதைத்தார்கள். எந்த அளவிற்கென்றால் அல்லாஹ்வே தனது நேசருக்கு "பொறாமைக்காரர்களின் பொறாமையிலிருந்து பாதுகாப்புக் கேளுங்கள்" என்று சொல்லிவிட்டான்.

وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ ۝

தர்ஜுமா : "பொறாமைக்காரரின் தீங்கை விட்டும் - அவன் பொறாமை கொள்ளும் போது (நான் பாதுகாவல் தேடுகிறேன்)".

எந்த அளவிற்கு பரிபூரணத்துவம் பெரியதாக இருக்குமோ அந்த அளவிற்கு பொறாமைக்காரனின் பொறாமை அதிகமாக ஆகிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் போன்று பரிபூரணத்துவம் யாருக்குமே கிடைத்ததில்லை என்பதால் அவர்களின் எதிர்ப்பாளர்களைப் போன்று வேறு யாரும் பொறாமை கொள்ளவில்லை. இந்த பொறாமைக்காரர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதிர்த்து நிற்க வேண்டி வந்தது. அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் தனது நேசருக்கு உதவி செய்தான். இறுதியாக சத்தியம் வென்றது. யூதர்களுக்கு ஆரம்பத்திலிருந்தே உண்டான இந்த பொறாமை இன்று வரை இஸ்லாமிய சமுதாயத்துடன் தொடர்ந்து கொண்டுள்ளது.

# பொறாமையின் அனந்தரம்

இது பொறாமையின் சரித்திரமாகும். முஃமின்களுக்கோ இந்த பொறாமையை ஆரம்பகால சமுதாயத்திலிருந்தே சகிக்க வேண்டி வந்துள்ளது. மேலும், யாருக்கெல்லாம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய அனந்தர சொத்திலிருந்து பங்கு கிடைக்குமோ அவருக்கு பொறாமையை சகிக்க வேண்டியது வரும். ஏனெனில் வாரிசுக்கு தனது தந்தையிடமிருந்து ஒவ்வொரு வஸ்துவிலும் பங்கு கிடைக்கிறது. ஒரு ஊசி கூட தந்தை விட்டுச் செல்வாரெனில் பங்கு வைக்கும் போது அதையும் கவனத்தில் கொள்ளப்படுகிறது. எனில் எப்போது ஊசியைக் கூட கவனிக்கப்படுகிறதோ எல்லா வஸ்த்துக்களிலிருந்தும் பங்கு கிடைக்கிறதோ இப்போது தெரிய வருகிறது. யார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரிபூரண வாரிசாவாரோ அவர் அதே போன்று விரோதங்களையும் எதிரிகளையும் எதிர் கொள்ள வேண்டியது வரும். ஆனால் அவர் இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் போன்ற நற்குணங்களை கையாள வேண்டியது வரும்.

இந்த சமுதாயத்தில் எத்தனை பெரிய பெரிய உலமாக்களும் பெரியார்களும் சேவை செய்து சென்றார்களோ அனைவருமே இந்த பொறாமையை எதிர் கொள்ள வேண்டித்தான் வந்தது.

# இமாமுல் அஃழம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களின் மீது பொறாமை கொண்டவர்கள்

இமாமுல் அஃழம் அபூஹனீபா (ரஹ்) அவர்களுக்கு எந்த அளவிற்கு பொறாமைக்காரர்களை எதிர் கொள்ள வேண்டி வந்தது எனில் இந்த சமுதாயத்தின் மிகக் குறைவான உலமாக்களுக்குத் தான் அந்த அளவிற்கு எதிர் கொள்ள வந்திருக்கும். ஏனெனில் அல்லாஹுதஆலா அவர்களை இமாமே அஃழம் ஆக்கிவிட்டதனால் அவர்கள் எவ்வளவு பெரியவர்கள் ஆனார்களோ அந்த அளவு பொறாமையையும் சகிக்க வேண்டி வந்தது. யாருக்காவது எந்த அளவு பரிபூரணத் தன்மைகள் அதிகமாக ஆகுமோ அந்த அளவு அல்லாஹுதஆலா உடைய அருட்கொடைகள் அதிகமாக ஆகுமோ அதே அளவு அவருக்கு பொறாமையை அதிகமாக சகிக்க வேண்டி வரும். எனவேதான் அவர்களுக்கும் பொறாமைக்காரர்கள் அதிகமாக இருந்தனர்.

# தேவையற்ற கேள்வி

அவர்கள் மீது பொறாமைப் படக்கூடியவர்கள் அவர்களை துன்புறுத்துவதற்காக என்னென்ன விதமான வழிகளைக் கையாண்டார்கள்? இது சம்பந்தமாக ஒரு நிகழ்ச்சியை உங்களுக்குச் சொல்கிறேன். ஒருதடவை அவர்கள் கேள்விகளுக்கு பதில் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஒரு பொறாமைக்காரன் அங்கேயும் வந்து சேர்ந்துவிட்டான். அவன் ‘எப்படியாவது அவரை அக்கூட்டத்திற்கு மத்தியில் இவர் கேள்விகளுக்கு பதில் சொல்ல இயலாதவர், என்று காட்டி விட வேண்டும்’ என்று நினைத்தான். உண்மையில் அவன், அவர்களை ‘தாழ்த்துவர்’ என்று காட்ட விரும்பி கேட்டான்.

"அபூஹனீஃபா! நீங்கள் கேள்விகளுக்கு பதில் கொடுக்கின்றீர்கள்" என்று கேள்விப்பட்டேன் என்றான். இமாமுல் அஃழம் (ரஹ்) அவர்கள் "சகோதரரே! கேளுங்கள்" என்றார்கள். அவன் "மலத்தின் சுவை எப்படியிருக்கும்?" என்று கேட்டான். உண்மையில் அதற்கு பதிலே இல்லாதபடி கேள்வி கேட்க விரும்பினான். ஆனால் அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் அவர்களை உயர்ந்த அறிஞராக்கி இருந்தான். இதுபற்றி இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்கள் "ஃபிக்ஹ்கலையிலே மக்கள் இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் முன் சிறுபிள்ளைகள் ஆவர். அவர்கள் நாடினால் மரத்தினால் ஆன தூளைக்கூட ஆதாரங்கள் மூலம் தங்கத்தினால் ஆனது என நிரூபிக்கும் அளவு ஆதார வலிமை கொண்டவர்கள். முன் இருப்பவன் வாயடைத்து போவான்" என்று கூறுகிறார்கள். அவன் மலத்தின் சுவை பற்றி கேள்வி கேட்ட போது "இனிப்பானது" என பதிலளித்தார்கள். அவன் திகைத்துப் போய் கேட்டான் "இதற்கு என்ன ஆதாரம்?" என்று. "உப்புக்கரிக்கும் வஸ்துவின் மீது ஈக்கள் அமரமாட்டா" என பதிலளித்தார்கள் என்றால் அல்லாஹ் அவர்களுக்கு ஆச்சரியகரமான பரிபூரணத் தன்மையை வழங்கி இருந்தான்.

# பொறாமையின் எல்லை

இமாம் அவர்களுடன் பொறாமைக்கான ஆச்சரியகரமான நிகழ்ச்சிகள் உள்ளன. ஆனால் ஒரு நிகழ்ச்சி எல்லையில்லா ஆச்சரியகரமானதாகும். இந்த அளவிற்கும் கூட பொறாமைக்கார்கள் செயல்படுவார்களா என்ன? சில பொறாமைக்காரர்கள் சேர்ந்து திட்டமிட்டார்கள். இமாம் அவர்களை எப்படியாவது பொது மக்களின் முன்பு தலை குனிய வைத்துவிட வேண்டும் என்றும் எப்போது தலை குனிவு ஏற்பட்டுவிடுமோ நாம் மக்களிடம் இப்படிப்பட்ட ஒரு மனிதரின் பேச்சைக் கேட்பது என்ன அவசியம் என்று

கூறி அவரது முக்கியத்துவத்தை குறைத்துவிடலாம் என்றெண்ணினர். அவர்கள் ஒரு திட்டம் தீட்டினர். அவர்கள் பள்ளியிலிருந்து வீடு வரும் வழியில் ஒரு விதவையின் வீடும் இருந்தது. "உனக்கு ஏராளமான பணம் தருகிறோம். நீ எப்படியாவது இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்களை வீட்டிற்குள் அழைத்துக் கொள்" என்று அந்த விதவையைத் தயார் செய்தனர். அவளுக்கோ ஒரு பக்கம் வறுமை மறுபக்கம் இத்தனை பெரும் செல்வம் கிடைக்கிறது. இமாம் அவர்களிடம் இவர்கள் ஏதோ பேச நினைக்கிறார்கள் என்று நினைத்து "சரி ஏதாவது தந்திரம் செய்து அவரை வீட்டிற்குள் அழைக்கிறேன்" என்று ஒப்புக் கொண்டாள்.

முடிவாக இமாம் அவர்கள் தங்கள் வீடு திரும்பும் போது இவர் தன் வீட்டிலிருந்து வேகமாக வெளிப்பட்டு போர்வைக் குள்ளிருந்தபடியே "ஓ! வழிப்போக்கரே! வீட்டில் ஒரு மரணத் தருவாயில் உள்ள நோயாளி உள்ளார். அவர் மரண சாசணம் செய்ய விரும்புகிறார். எனக்கோ சரியாக புரியவில்லை. தாங்கள் கொஞ்சம் அவரது மரண சாசனத்தைக் கேட்டுக் கொள்ளுங்களேன்" என்று கூறினார். 'மரணத் தருவாயில் உள்ளவர் சொல்லும் வஸீஅத்நாமாவை கேட்டுக் கொள்ள வேண்டும்' என்பது ஷரீஅத்தின் கட்டளை இது வாஜிபுடைய அந்தஸ்த்தில் வருகிறது. எனவே, இமாம் அவர்கள் வீட்டிற்குள் நுழைந்தார்கள். அவர்கள் காலடி வைத்ததுதான் தாமதம் ஒளிந்து கொண்டிருந்த பொறாமைக்காரர்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள். "இஷாவிற்குப் பின்பு இரவின் தனிமையில் விதவையின் வீட்டிற்கு நீங்கள் வந்து போய்க் கொண்டிருக்கிறீர்களே! நீங்கள் எப்படி மக்களின் இமாமாக இருக்கிறீர்கள்" என்று சொல்ல ஆரம்பித்தனர்.

அந்தப் பெண்ணுக்கும் இவர்கள் செய்கை ஆச்சரியமாகப்பட்டது. அவர்களின் ஒருவன் ஓடோடிச் சென்று

நகர தலைமை அதிகாரியிடம் "ஐயா! நகரின் கல்விப் பாசறையின் மிக முக்கிய இமாம் இரவின் தனிமையில் ஒரு வீட்டில் பிடிபட்டுள்ளார்" என்று தகவல் கொடுத்தான். அவருக்கோ தூக்கம் மிகைத்ததால் காவலருக்கு "இமாமையும் அந்த பெண்ணையும் பிடித்து சிறையில் அடையுங்கள் நான் காலையில் விசாரிக்கிறேன்" என்று உத்தரவு போட்டுவிட்டார்.

இப்போது அந்த பெண்ணையும் உடன் சிறைபிடிக்கப்பட்டது. அந்த பெண்ணோ இது என் மீது கேடாகிவிடும் என்று முன்பே விளங்கவில்லை. முடிவாக இமாம் அவர்களையும் அந்தப் பெண்ணையும் பிடித்து சிறையில் அடைத்துவிட்டார்கள். பொறாமைக்காரர்களோ காலையில் எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும் என்று அங்குள்ளவர்களில் ஓசை எழுப்பிக் கொண்டே வீடு சென்றார்கள்.

போலீஸ்காரர்கள் அவர்கள் இருவரையும் ஒரே அறையில் அடைத்துவிட்டார்கள். இமாம் ஸாஹிப் அவர்கள் தங்கள் வழமைப்படி ஒழுவுடன் இருந்தார்கள். அந்த இருளில் நஃபில் தொழ ஆரம்பித்துவிட்டார்கள். இஷாவுக்குச் செய்த ஒழுவில் சுபுஹு தொழுவது அவர்களின் வழமையல்லவா? தங்கள் மஃமூல்படி ஆரம்பித்து விட்டார்கள். அந்த பெண்ணோ "நானும் இளமையானவள், தனிமையும், இருளும் இருக்கிறது. இவர் கெட்ட மனிதராக இருந்தால் இந்நேரம் என்னுடன் கெட்ட நடத்தை செய்திருக்கலாம். இவரோ இப்பொழுதும் தன் ரப்பை வணங்குவதில் ஈடுபட்டுள்ளாரே?" என்று எண்ணினாள். இப்பொழுது அவள் உள்ளத்தில் 'இப்படிப்பட்ட நல்லவர் சிறைக்கு வர நான் காரணமாகிவிட்டேனே!' என்ற வருத்தம் உண்டாயிற்று. மனதுக்குள் வெட்கப்பட்டுப் போனாள்.

முடிவாக அவர்கள் சில ரக்கஅத்துகள் தொழுது ஸலாம்

கொடுத்தவுடன் “என்னை மன்னித்துவிடுங்கள்” என்று கெஞ்சினான். முழு சம்பவத்தையும் சொல்ல ஆரம்பித்தாள். “எனக்கு பொருள் கொடுப்பதாக வாக்கு கொடுக்கப்பட்டது. நானும் ஏழ்மையின் காரணமாக ஒப்புக் கொண்டேன். என்னை மன்னித்து விடுங்கள்” என்று கதறினாள்.

இமாம் ஸாஹிப் அவர்கள் அவளுடைய எல்லா விஷயங்களையும் கேட்டுக் கொண்டார்கள். பிறகு சொன்னார்கள். “சரி இப்பொழுது இதற்கான தீர்வைச் சொல்கின்றேன்” என்று கூற அவளும் என்னவென்று கேட்க “இதன் தீர்வு என்னவெனில் இங்கே காவலுக்கு நிற்கும் போலீஸ்காரனிடத்தில் ‘எனக்கு வீட்டில் நிர்பந்தமான வேலை ஒன்று இருக்கிறது. நான் இங்கு கைதியாக உள்ளேன். காலை எனக்கு என்ன தீர்ப்பு வழங்கப்படும் என்று தெரியவில்லை. நீங்கள் என்னை வீட்டிற்கு அழைத்துச் செல்லுங்கள். நான் எனது வேலையை முடித்துக் கொள்கிறேன். மீண்டும் என்னை இங்கு அழைத்து வந்துவிடுங்கள்’ என்று அழுது புலம்பிச் சொல். நீங்கள் பெண்ணானதால் அழுது தவித்தால் அவன் ஒப்புக் கொள்வான். அவன் ஒப்புக் கொண்டதும் நீங்கள் என் வீட்டிற்குச் செல்ல வேண்டும் என் மனைவியிடம் எல்லா விபரங்களையும் சொல்லி உன் புர்காவை அவளுக்கு கொடுத்து அவளை இங்கே அனுப்பிவைத்து விடு” என்று சொன்னார்கள்.

திட்டமிட்டபடி காவலாளியிடம் அந்தப் பெண் அழுதாள். இரண்டு சொட்டிற்கு பதிலாக அந்நேரம் நான்கு சொட்டு கண்ணீரே வடித்திருப்பாள். அந்தப் போலீஸ் ஒப்புக் கொண்டான். அவளுடன் நடந்தான் அவனுக்குப் பின்னால் அவள் நடந்து நேரே இமாம் ஸாஹிபின் வீட்டை அடைந்தாள். இமாம் ஸாஹிபின் மனைவியிடம் எல்லா விபரங்களையும் எடுத்துச் சொன்னால். மேலும், தனது புர்காவை அவரிடம்

கொடுத்துவிட்டாள். இமாம் ஸாஹிபின் மனைவி அவர்கள் புர்காவை அணிந்துக் கொண்டு போலீஸுடன் இமாமிடம் வந்துவிட்டார். காலை ஆனதும் அந்த தலைமை அதிகாரி விசாரணை நடத்தினார். நகர் முழுவதிலுமுள்ள பொறாமைக்காரர்கள் வேடிக்கை பார்க்க ஒன்று கூடிவிட்டார்கள். போலீஸ் அவ்விருவரையும் நீதி மன்றத்தில் ஆஜர்படுத்தியது.

அதிகாரி "அபூஹனீஃபா அவர்களே! உங்கள் கல்வியைப் பற்றி எவ்வளவு பிரபல்யம் உள்ளது. நீங்கள் மக்களின் தலைவர் என்று சொல்லப்படுகிறீர்கள். ஆனால் நீங்களே இஷாவிற்குப் பின் அன்னிய பெண்ணின் வீட்டில் தனியாக இருக்கின்றீர்களே?" என்று கேட்டார். "எந்த அன்னியப் பெண்?" என்று கேட்டார்கள். "உங்களை எந்தப் பெண்ணுடன் சிறைபிடிக்கப்பட்டதோ அவர்தான்" என்றார். "இவர் அன்னியப் பெண் அல்லவே இவர் எனது மனைவியாவார்" என்றார்கள். இவர் உங்களுக்கு எப்படி மனைவியாவார்? "அதோ எனது மாமனார் நின்றுக் கொண்டுள்ளார். மறைவில் அழைத்துச் சென்று தனது மகளா? இல்லையா? என்று பார்க்கச் சொல்லுங்கள்" என்று சொன்னார்கள். இப்போது மாமனார் பார்த்தபோது "இவர் எனது மகள்தான் என்று நான் சாட்சி கூறுகிறேன்" என்றார்கள்.

பொறாமைக்காரர்களுக்கு 'இவர் எப்படி இதிலிருந்து விடுபட்டார்' என்று கற்பனையிலும் உதிக்கவில்லை. அல்லாஹுதஆலா இமாம் ஸாஹிபவர்கள் மீது கிருபை செய்தான். பொறாமைக்காரர்களோ மேலும் பொறாமையில் எரிந்தவர்களாக வீடுகளுக்குச் சென்றனர். அல்லாஹுதஆலா கண்ணியத்துடன் இமாம் ஸாஹிப் அவர்களை நிரபராதியாக்கினான்.

பொறாமையின் காரணமாக மனிதர்கள் என்னென்ன செய்வார்கள் என்பதை காட்டுவது நோக்கமாகும். அல்லாஹுதஆலா இந்த பொறாமைத் தீயை அனைத்துவிடுவானாக! இல்லையெனில் இந்த நெருப்பு காலப்போக்கில் அதிகரித்துக் கொண்டே செல்லும்.

# ஹதீஸ்களின் வெளிச்சத்தில் பொறாமை

புகழ்மிக்க ஆறு ஹதீஸ் கிரந்தங்களில் பொறாமையைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

إِنَّهُ سَيُصِيبُ أُمَّتِي دَاءُ الْأُمَمِ

தர்ஜுமா : “நிச்சயமாக என் உம்மத்தை முந்திய உம்மத்தினர்களின் நோய் பீடித்தே தீரும்”.

இந்த பொறாமை முந்தய சமுதாயத்தினரின் நோயாகும். அல்லாஹு அக்பர் கபீரா! ஸஹாபாக்கள் “ஓ! அல்லாஹ்வின் நேசரே! உம்மத்தின் நோய் என்பது என்ன?” என்று கேட்டார்கள். சொன்னார்கள்:-

العرش والبطر والتكاثر والتنافس والحسد

தர்ஜுமா : “தற்பெருமை, புறக்கணித்தல், பொருளை அதிகமாக்கத்தேடுதல், ஒருவருக்கொருவர் (பொருளில்) முந்திக் கொள்வது, பொறாமை”. “இவை முந்திய உம்மத்தினரின் நோய்களாகும். மேலும், இவை எனது உம்மத்தினரையும் வந்தடையும்” என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சொன்னார்கள்.

لا يجتمعان فی قلب عبد الایمان والحسد

தர்ஜுமா : "எந்த ஒரு அடியானின் உள்ளத்திலும் இரு வஸ்த்துக்கள் ஒன்று சேரமாட்டா ஒன்று ஈமான் மற்றது பொறாமை (பொறாமை இத்தனை கொடிய வியாதியாகும்)".

ஒரு பரக்கத் பெற்ற ஹதீஸ் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:-

لا یزال الناس بخیر مالم یتحاسدوا

தர்ஜுமா : "மக்கள் பொறாமைப் படாமல் இருக்கும் வரை அருட்கொடைகளிலேயே இருப்பார்கள்".

எனவே, பொறாமையினால் அருட்கொடைகள் நீங்கிவிடுகின்றன.

**நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்:-**

ماحسدتکم الیهود علی شئ ماحسدکم علی الاسلام

தர்ஜுமா : "நீங்கள் முஸ்லிமாக இருப்பதைத்தான் யூதர்கள் பொறாமை கொள்வார்கள். வேறு எந்த காரணத்திற்காகவும் உங்கள் மீது பொறாமை கொள்ளமாட்டார்கள்".

(இவர்களுக்கு ஏன் இஸ்லாம் கிடைத்தது என பொறாமைப்பட்டார்கள்)

**நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:-**

لتذهبن الشحناء والتباغض والتحاسد

தர்ஜுமா : "மேலும், கண்டிப்பாக உங்களை குரோதம், கோபம், பொறாமை வந்தடையும்".

(பொதுவாக இவை சமீபத்திலுள்ளவர்கள் மீது அதிகம் ஏற்படும்)

இந்த வார்த்தையை ஹழரத் ஆயிஷா சித்தீகா (ரலி) அவர்களும் பயன்படுத்தியுள்ளார்கள்.

ماحسدت احدا ماحسدت خديجة

தர்ஜுமா : "கதீஜா (ரலி) அவர்கள் மீது நான் பொறாமைப்பட்டது போல் வேறுயாருடனும் அவ்வளவு பொறாமைப்பட்டதில்லை". ஏனெனில் அவர்கள் இறந்துவிட்ட பின்பும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எப்போது வீட்டில் ஆடு அறுத்தாலும் அதன் இறைச்சியை பங்கிடும் போது கதீஜா (ரலி) அவர்களின் சக்களத்தியர்களுக்கு கதீஜா (ரலி) அவர்களின் தரப்பிலிருந்து அன்பளிப்பாக அனுப்புவார்கள். அவர்களை அதிகம் நினைவு கூர்வார்கள். அப்போது எனக்குள்ளே ஒரு "வஸ்து" (பொறாமை) வந்து குடிகொண்டிருந்தது.

பொறாமைபற்றி சமுதாய பெரியார்களின் சொற்களும் பொறாமையின் இழிவு குறித்து ஆச்சரியமான விஷயங்கள் இடம் பெற்றுள்ளது.

**செய்யிதுனா ஆமிர் முஆவியா (ரலி) கூறினார்கள்:-**

"தீமையின் குணங்களிலே பொறாமையை விட மிக நீதமானது எதுவுமே இல்லை. பொறாமை கொள்ளப் பட்டவனை அது சென்றடையும் முன்பே பொறாமைக் காரனை சென்றுவிடுகிறது".

அவன் நிம்மதியாகத் தன் வீட்டில் இருக்கிறான். பொறாமைக்காரனோ தீயில் எரிந்துக் கொண்டிருக்கிறான்.

**மீண்டும் அவர்கள் கூறினார்கள்:-**

"எல்லா மனிதர்களையும் திருப்திப்படுத்திவிடலாம், பொறாமைக்காரனைத் தவிர அவன் அந்த அருட்கொடை, பொறாமை கொள்ளப்பட்டவனிடமிருந்து நீங்கினால் தான் திருப்தி கொள்வான்".

**செய்யிதுனா உமர் பின் கத்தாப் (ரலி) கூறினார்கள்:-**

"அல்லாஹ், தனது அடியானுக்கு அருட்கொடை யளித்தால் அதன்பால் யாரேனும் ஒரு பொறாமைக்காரன் கவனம் செலுத்துகிறான்".

ஒரு அருட்கொடை வந்தால் அதனுடனேயே பொறாமைக்காரர்களும் வந்துவிடுவார்கள்.

**செய்யிதுனா அபூதர்தா (ரலி) கூறினார்கள்:-**

"மரணத்தை நினைவு கூறும் எந்த அடியானுக்கும் மகிழ்ச்சியும் குறைந்து போகும் பொறாமையும் குறைந்து போகும்".

செய்யிதுனா ஹஸன் (ரலி) பொறாமையைப் பற்றி இப்படி குறிப்பிட்டார்கள்.

"ஆதமின் மகனே! நீ ஏன் தன் சகோதரனைப் பற்றி பொறாமை கொள்கிறாய்? அல்லாஹ் உன் சகோதரனுக்கு அவன் கண்ணியத்தின் காரணமாக அருட்கொடை வழங்கியிருந்தால் அல்லாஹ் கண்ணியப்படுத்தியவனை நீ ஏன் பொறாமை படுகிறாய்?

அல்லது அவனுக்கு சோதனைக்காக அந்த அருட்கொடை அவனுக்கு வந்திருக்குமானால் அவனது இறுதி முடிவு நரகமாக இருப்பவனைப் பற்றி நீ ஏன் பொறாமைப்படுகிறாய்?"

**இப்னு முஃத் (ரலி) கூறுகின்றார்கள்:-**

الحسد داء الجسد

தர்ஜுமா : "பொறாமை உடலின் நோய்".

**பெரியார்கள் கூறினார்கள்:-**

الحسد جرح لا يبرح

தர்ஜுமா : "பொறாமை ஆறாத புன்னாகும்".

உலமாக்கள் இப்படியும் கூறினார்கள். 'பொறாமை' என்பது அதன் காரணமாக விண்ணிலே அல்லாஹ்வுக்கு மாறு செய்யப்பட்ட முதல் பாவமாகும். மேலும் அதன் காரணமாக மண்ணிலே அல்லாஹ்வுக்கு மாறு செய்யப்பட்ட முதல் பாவமாகும். அதாவது ஷைத்தான் பொறாமையின் காரணமாக மனிதனுக்கு ஸஜ்தா செய்யவில்லை. அல்லாஹ்விற்கு மாறு செய்தான். காபீல் பொறாமையின் காரணமாக ஹாபீலை கொலை செய்தார். அல்லாஹ்விற்கு மாறு செய்தார்.

**ஒரு பெரியார் கூறுகிறார்கள்:-**

* "பொறாமைக்காரனுக்கு நல்லோர்களின் அவைகளிலிருந்து பழிப்பையும் இழிவையும் தவிர வேறு கிடைக்காது.

* மலக்குகளிடமிருந்து சாபமும், கோபமும் தவிர வேறு எதுவும் கிடைக்காது.

* படைப்பினங்களிடமிருந்து துக்கமும் பதட்டத்தையும் தவிர வேறு கிடைக்காது.

* சகராத்து நிலையில் (மரண நெருக்கத்தில்)

துன்பமும், கடும் வேதனையும் தவிர வேறு கிடைக்காது.

* கியாமத்து நாளையிலே கோபமும், நஷ்டமும் தவிர வேறு எதுவும் கிடைக்காது".

**மேலும், ஒரு பெரியார் கூறுகிறார்கள்:–**

"யார் அல்லாஹ்வின் விதியை திருப்தி கொள்வாரோ யாரும் அவரை கோபப்படுத்த (பொறாமைப்பட வைக்க) முடியாது. யார் அல்லாஹ் கொடுப்பதை போது மாக்கிக் கொள்வாரோ பொறாமை அவரில் நுழைய முடியாது".

**எழுத்தாளர் அப்துல் ஹமீத் அவர்கள் கூறுகிறார்கள்:–**

"பொறாமைக்காரரின் துக்கம் விஷம் குடித்தவனைப் போன்றிருக்கும்".

**மேலும், கூறுகிறார்கள்:–**

"சிங்கம் ஒரு மனிதருக்குப் பின்னால் இருப்பது பொறாமைகாரன் பின்னால் இருப்பதை விட சிறந்ததாகும்".

**சில மஷாயிக்குமார்கள் கூறுகிறார்கள்:–**

"பொறாமை எப்போதுமே தீராத காயமாகும்".

"பொறாமை ஒரு பொது காயமாகும்".

எனவே, இந்த நோயின் காரணமாக மனிதனின் உள்ளத்தில் எல்லா நேரமும் ஒரு நெருப்பு எரிந்துக் கொண்டே இருக்கும். ஏன் இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டது என்று அவன் உறுதிப்படுத்த முடியாது. இன்று நமது காலத்தில் நெருக்கமான மக்கள், நண்பர்களிலே வமிசத்திலே அயலகத்தாரிலே இந்த வகையான நோயைக்காண

முடிகிறது. யாருடைய மகனுக்காவது நல்ல இடத்தில் பெண் அமைந்துவிட்டதெனில் இரு சகோதரர்களுக்கு மத்தியில் பொறாமை ஏற்பட்டுவிடுகிறது. யாருடைய பேரத்திலாவது நல்ல விலை படிந்துவிட்டதெனில் அந்த வியாபாரத்தில் உள்ளவர்களுக்கு மத்தியில் ஒரு பொறாமை ஏற்பட்டுவிடுகிறது. அண்டை அயலகத்தார் மத்தியில் பொறாமை, ஒரே ஊரிலே வசிப்பவர்களுக்கு மத்தியில் பொறாமை, ஒரே வயதுடையவர்கள் மத்தியில் பொறாமை, என பொறாமை ஒரு பொது நோயாகும்.

## பொறாமையின் எதார்த்தம்

இந்த பொறாமை எவ்வளவு கொடிய கெட்ட நோயென்றால் அதன் உதாரணம் ஒரு நெருப்புக்கு இணையானதாகும். அடியானின் உள்ளத்தில் இணைந்தே இருக்கும். அடியான் தனது கட்டுப்பாட்டில் இருக்கமாட்டான்.

பொறாமை பட்டுக் கொண்டே இருப்பான். உண்மையில் பொறாமை கொள்வதென்பது அல்லாஹ்வின் பங்கு வைப்பின் மீது ஆட்சேபிப்பதாகும்.

اَهُمْ يَقْسِمُوْنَ رَحْمَتَ رَبِّكَ ؕ نَحْنُ قَسَمْنَا بَيْنَهُمْ مَّعِيْشَتَهُمْ
فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَرَفَعْنَا بَعْضَهُمْ فَوْقَ بَعْضٍ دَرَجٰتٍ

தர்ஜுமா : “(என்ன!) இவர்கள் உம்முடைய ரப்பின் ரஹ்மத்தை (நுபித்துவத்தை) பங்கு போடுகிறார்களா? நாம் தாம் உலக வாழ்வில் அவர்களுக்கிடையே அவர்களுடைய உணவைப் பங்கிட்டுள்ளோம். அவர்களின் சிலரை சிலரை விட பதவிகளில் மேலாக உயர்த்தியுள்ளோம்”.

وَاِنْ مِّنْ شَیْءٍ اِلَّا عِنْدَنَا خَزَآئِنُهٗ ۔ وَمَا نُنَزِّلُهٗۤ اِلَّا بِقَدَرٍ مَّعْلُوْمٍ

தர்ஜுமா : "எந்த பொருளும் அதனுடைய பொக்கிஷங்கள் நம்மிடம் இருந்தே தவிர (வேறு எவரிடமும்) இல்லை. அதனைக் குறிப்பிட்ட அளவைக் கொண்டே தவிர நாம் இறக்கி வைப்பதில்லை".

அவன் யாருக்கு நாடுகிறானோ தனது அருட்கொடைகளிலிருந்து பங்கு வைத்து கொடுத்து விடுகிறான். அவன் யாருக்காவது அருட்கொடையை கொடுக்க மற்றவனுக்கு 'இவனுக்கு இது ஏன் கிடைத்தது?' என்று அது கெட்டதாகப்பட்டால் இது அல்லாஹுதஆலாவின் பங்கு வைப்பின் மீது ஆட்சேபனையாக அமைகிறது. இதனால்தான் இது மிகக் கடுமையான குற்றமாகிவிடுகிறது.

# எல்லை கடந்து நாசப்படுத்தும் பாவம்

"நன்மைகள் அழிந்து பாவங்கள் கண்டிப்பாகி விடுகின்றன என்று சில பாவங்களை பற்றி சொல்கிறார்களே! பொறாமை அப்படிப்பட்ட பாவங்களில் உள்ளதாகும்".

**நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்:-**

الحسد یاکل الحسنات کما تاکل النار الحطب

தர்ஜுமா : "நெருப்பு விறகைத் திண்பது போன்று நன்மைகளை பொறாமை திண்று விடுகிறது".

எனவே பாருங்கள்!

1. ஒன்று ஷிர்கைப்பற்றி (இணைவைக்குதல் பற்றி)

لئن اشركت ليحبطن عملك

தர்ஜுமா : "நீ (ங்கள்) இணைவைத்தால் உனது அமல் அழிந்து விடும்".

2. இரண்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அந்தஸ்திலே ஒழுக்கக் குறைவு செய்வது பற்றி "செய்த நன்மைகளை அழித்து விடுகிறது" என்று சொன்னார்கள்.

சூரா ஹுஜ்ராத்தில் அல்லாஹ் சொன்னான்:-

لَا تَرْفَعُوْٓا اَصْوَاتَكُمْ فَوْقَ صَوْتِ النَّبِيِّ

தர்ஜுமா : "(முஃமின்களே) உங்கள் சப்தங்களை நபியின் சப்தத்தைக்காட்டிலும் உயர்த்தாதீர்கள்!)".

ஓ! எனது நேசரின் தோழர்களே! உங்களின் குரல் ஓசைகளை எனது நேசரின் ஓசையை விட உயர்த்தக் கூடாது! அப்படி உயர்த்தினால்.......

ان تحبط اعمالكم وانتم لاتشعرون الاية

தர்ஜுமா : "நீங்கள் செய்த நல் அமல்கள் உங்களுக்கு தெரியாமல் அழிந்துவிடும்".

எனவே, மூன்று வகையான பாவங்களின் காரணமாக அடியானின் 'செய்த நன்மைகள்' அழிந்து விடுகின்றன. ஒன்று, அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத்துடன் யாரையாவது கூட்டாக்குவது. இது அல்லாஹ்வின் ரோஷத்தை கிளரும் செயலாகும். இரண்டு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அந்தஸ்தில் ஒழுங்கீனம் செய்வது. இது நேசரின் விஷயத்தில் செய்யப்படும் குற்றம். மூன்று, ஒரு முஃமினின்மீது பொறாமை கொள்வது. இது கொடுக்கப்பட்ட அருட்கொடை மீது அவனது பங்கு வைப்பின்

மீது ஆட்சேபிப்பதாகும். இதனால்தான் பொறாமைப்பற்றியும் இது 'செய்த நன்மைகளை' அழித்து விடுகிறது என்று சொல்லப்பட்டது. கவனிக்க வேண்டும்! முதலாவது நம்மிடத்தில் நன்மைகளே இல்லை. ஏதாவது ஓட்டை உடைசல் நன்மைகள் இருந்தாலும் பொறாமை நோயில் விழுந்து அதையும் தொலைத்து விடுவோமானால் நம்மைப் போன்ற அறிவற்றவர்கள் யாரும் இருக்க முடியாது. இதனால் பொறாமை நோயிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாவல் தேட வேண்டும்.

## பொறாமை மற்றும் ரஷ்க் கின் வித்தியாசம்

இதையும் கவனத்தில் கொள்ளுங்கள். அதாவது ஒன்று ரஷ்க் ஆகும். மற்றொன்று பொறாமை. 'ரஷ்க்' கை அரபி மொழியில் 'கிப்தா' என்று சொல்கிறார்கள். (தமிழில் ஆசை கொள்ளுதல், ஆர்வப்படுதல் எனலாம்) 'ரஷ்க்' கின் பொருள் "யாரிடமேனும் ஏதேனும் அருட்கொடையைப் பார்த்து இது எனக்கும் வேண்டுமே" என்ற எண்ணம் உள்ளத்தில் தோன்றுதலாகும். அதுதான் 'ரஷ்க்' என்று சொல்லப்படுகிறது. இது ஆகுமானதாகும். ஆனால் பொறாமையின் பொருள் இந்த அருட்கொடை அவனிடத்தில் ஏன் உள்ளது? என்ற எண்ணம் உள்ளத்தில் தோன்றுவதாகும். எனவேதான் பொறாமை மற்றும் 'ரஷ்க்' க்கின் மத்தியில் வேறுபாட்டை தெரிந்து கொள்வது அத்தியாவசியமானதாகும். முஃமினுக்கு 'ரஷ்க்' உண்டாகும். கல்வியாளர்களில் யாரையாவது பார்த்து எனக்கும் இதே போன்ற கல்வியை அல்லாஹ் தர வேண்டுமே! இதே போன்ற அமலைத் தர வேண்டுமே! என்று 'ரஷ்க்' ஏற்படுவது. யாருடைய மகனையாவது பார்த்து எனது மகனும் இப்படிப்பட்ட நல்லவனாக வேண்டும் என்று மனதில் 'ரஷ்க்' ஏற்படுவது. இது ஆகுமானதாகும். அல்லாஹ்வின் அருட்கொடையைப் பார்த்து ஆசை கொண்டு

அல்லாஹ்விடம் அந்த அருட்கொடையைக் கேட்பதின் பெயர் 'ரஷ்க்' ஆகும். அதாவது அது அவருக்கும் இருக்கட்டும் ஆனால் எனக்கும் வேண்டும் என்றால் அது சரியானதாகும்.

ஆனால் 'அவருக்கு இது ஏன் கிடைத்தது?' என்று எண்ணுவது அல்லாஹ்வின் பங்கு வைப்பின் மீது ஆட்சேபனை கொள்வதாகும். ஏனெனில் கொடுக்கக்கூடியவன் நாடினான் கிடைத்துவிட்டது. அந்த எஜமான் முழு உரிமையுடைய எஜமானாவான்.

فَعَّالٌ لِّمَا يُرِيدُ

தர்ஜுமா : "அவன் நாடியதை செய்து முடிப்பவன் ஆவான். அவன் யாருக்கு நாடுகிறானோ வழங்குவான்".

کوئی ماں لال نہیں جنا اس کی بات کے اوپر اعتراض کر سکے

தர்ஜுமா : "எந்தத் தாயும் அவளது விஷயத்தில் ஆட்சேபனை செய்யும் ஒருவனைப் பெற்றிருக்கவில்லை".

எனவேதான் இது அல்லாஹ்வின் பங்கின் மீது ஆட்சேபனையாகிறது. இதனால் தான் மிகப் பெரும் பாவமாகும். பொறாமைக்காரனுக்கு "மற்றவரிடத்தில் ஏன் உள்ளது?" என்ற எண்ணமே ஏற்படுகிறது.

# படிப்பினைக்குறிய சம்பவம்

ஒரு கதை சொல்லப்படுகிறது. எனக்கோ இது ஜோடிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆனால் விஷயத்தை விளக்கிக் கொடுப்பதற்கு மிக தோதுவானதாக இருப்பதால் எடுத்தெழுதுகிறேன். ஒரு மனிதர் இருந்தார். அவருக்கு வணக்கம் புரிவதன் ஆர்வம் மேலிட்டது. காட்டுக்குச் சென்றுவிட்டார். ஒரு குகையில் சென்று மிக அதிகமாக வணக்கம் புரிந்தார். நீள நீளமான ஸஜ்தாக்கள், தஸ்பீஹ்கள், 'லா இலாஹ இல்லல்லாஹ்' திக்ர் செய்தார். இவ்வாறு

ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது ஒரு நேரம் வந்தது. அவர் மனதில் இறை உதிப்பு உண்டானது. "உங்கள் இபாதத் ஒப்புக் கொள்ளப்பட்டது. இப்பொழுது நீங்கள் என்ன துஆ கேட்பீர்களோ ஒப்புக் கொள்ளப்படும்" என்று. எனவே அவர் "யா அல்லாஹ்! எனக்கும் எனது குடும்பத்தினருக்கும் நாங்கள் உன்னை அதிகமதிகம் இபாதத் செய்வதற்காக தினந்தோறும் உணவு கிடைத்துவிட வேண்டும்" என்று துஆ செய்தார்.

சில காலத்திற்கு பின்பு இவர் வீட்டிற்கு திரும்பி வந்துவிட்டார். அல்லாஹுதஆலாவும் எங்கிருந்தோ சமைக்கப்பட்ட உணவை அவருக்கு கொடுத்துக் கொண்டிருந்தான். தினந்தோறும் குடும்பத்தினருக்கும் அவருக்கும் உண்ண கிடைத்ததும் அவர் முகத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது. சந்தோஷகரமான வாழ்க்கை வாழ ஆரம்பித்தார். வணக்கமும் வெகு ஜோராக புரிந்து வந்தார். அவரது உறவினர்களில் ஒருவர் அவரைப் பார்த்தார். என்ன விஷயம் தெரியவில்லையே! செழிப்புடன் வாழ்கிறாரே! ரொட்டியும் உள்ளது போட்டியும் (கறியும், குடலும்) உள்ளது. ஏதேனும் கஜானா திறந்துவிட்டதா? என்ன விஷயம் என்று கேட்க வேண்டுமே என எண்ணினார்.

அவன் அவருடன் ஒட்ட ஆரம்பித்தான். சிலர் இப்படித்தான் அட்டை போல் ஒட்டிக் கொள்வார்கள். அவனும் ஒட்டிக் கொண்டான். மிகவும் பணிவையுயம் அன்பையும் வெளிப்படுத்தினான். ஒரு நாள் அந்த அப்பாவி மனிதர் விஷயத்தை சொல்லிவிட்டார். "நான் காட்டில் தனிமையில் வணக்கம் புரிந்தேன். ஒரு நாள் எனக்கு உனது; துஆ ஒப்புக் கொள்ளப்படும்" என்று இறை உதிப்பு உண்டானது. நான் உணவை துஆ கேட்டேன். இப்போது எங்களுக்கு சமைத்த உணவு வந்துவிடுகிறது. மன்னுசல்வா போன்று நாங்கள் வயிறார உண்டு அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துகிறோம். கவலையுமில்லை, துக்கமுமில்லை. ஏழ்மையுமில்லை.

அவன் இதைக் கேட்டு தானும் அவ்வாறே செய்தான். அதே குகையைச் சென்றடைந்தான். அங்கு சென்று அவனும் மாஷா அல்லாஹ் கடின வணக்கம் புரிந்தான். பல மாதங்களுக்குப் பின்பு அவனுக்கும் இறை உதிப்பு உண்டானது. "என் அடியானே! நீ நீண்ட வணக்கங்கள் புரிந்தாய். இப்போது உனது வணக்கம் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. நீ கேட்கும் துஆவை நாம் ஏற்றுக் கொள்வோம்" உடனே மேலிருந்து இந்த இறை உதிப்பு உண்டானதும் அவன் கைகளை உயர்த்தி துஆ கேட்டான். "யா அல்லாஹ்! அந்த எனது உறவினருக்கு தினந்தோறும் கிடைக்கும் உணவு இனி கிடைக்கக்கூடாது, நின்று விட வேண்டும்" என்று. இதுதான் பொறாமை, இன்னாருக்கு இந்த அருட்கொடை ஏன் கிடைக்கிறது? அதை சகிக்க முடிவதில்லை.

## புள்ளி விஷயம்

அரபு மொழியில் حسد (ஹசத்) என்ற வார்த்தையில் எத்தனை எழுத்துக்கள் உள்ளனவோ அவற்றில் புள்ளிகளே இல்லை. (தமிழிலும் - பொறாமை - புள்ளிகள் இல்லை) நமது பெரியார்கள் கூறினார்கள் யாருடைய உள்ளத்தில் பொறாமையின் நோய் உள்ளதோ அவரது உள்ளத்தின் எல்லா பரிசுத்த தன்மையை விட்டும் நீங்கிவிடுகிறார்.

பொதுவாக எவ்வளவு கஷ்டத்தில், மனத்துன்பத்தில் பொறாமைகாரர் இருப்பாரோ அவ்வளவு மனத்துன்பத்தில் உலகில் வேறுயாரும் இருப்பதில்லை. ஏனெனில் மற்ற நோய்களில் மாத்திரை சாப்பிட்டால் சுகம் வந்துவிடும். யாருக்காவது வயிற்றுவலி இருந்தது. தலைவலி இருந்தது. இடுப்பு வலி இருந்தது. மாத்திரை சாப்பிட்டார். ஒன்றிரண்டு மணி நேரங்களுக்குப் பிறகு சுகம் கிடைத்து விட்டது. இந்த பொறாமை வேதனையை என்ன செய்வது? எந்த சிகிச்சையும்

இல்லை. ஒவ்வொரு நேரத்திலும் வேதனை. ஒவ்வொரு நேரத்திலும் துக்கம் அடியானின் உள்ளத்தில் உள்ளது. எவ்வளவு வேதனையில் பொறாமைக்காரன் இருப்பானோ அவ்வளவு வேதனையில் யாரும் இருப்பதில்லை.

## அடிப்படைச் சட்டம்

ஒரு அடிப்படைச் சட்டத்தை (Thumb Rule) விளங்கிக் கொள்ளுங்கள். அல்லாஹுதஆலா எப்போது யாரேனும் ஒரு அடியானுக்கு அருட்கொடை வழங்குகிறானோ அந்த

## பொறாமையின் காரணங்கள்

இந்த பொறாமை ஏன் உருவாகிறது? என்பது சிந்திக்க வேண்டிய விஷயம். இதற்கும் சில காரணங்ளும், வழிவகைகளும் உள்ளன.

1. தற்பெருமையும் பெருமையும்

பொறாமை உருவாவதின் முதல் காரணம் மனதில் தற்பெருமை இருப்பதாகும். அடியான் தன்னைத் தானே என்னவோ என்று நினைத்துக் கொள்கிறான். எனவேதான் யாருக்காவது ஒரு துறையில் அந்தஸ்து கிடைக்கிறது என்பதை பார்க்கும் போது அவன் பொறாமையில் பீடிக்கப்பட்டவனாகிறான். ஷைத்தானுக்கு ஆதம் (அலை) அவர்களுடன் இந்த தற்பெருமை மற்றும் பெருமை காரணமாக பொறாமை உருவானது.

2. விரோதம்

இரண்டாவது விஷயம் மனதில் விரோதம் இருப்பதாகும். ஏதாவது வெறுப்பு இருப்பதாகும். இந்த வெறுப்பின் காரணமாக மற்றவரிடம் அல்லாஹுதஆலாவுடைய ஏதேனும் நிஃமத் அல்லது அவரது ஏதாவது சந்தோஷம் இவருக்கு

நல்லதாய்படாது.

3. ஒத்த வயது

அதன் இன்னமொரு காரணம் ஒத்தவயதாகும். ஒரே காலகட்டத்தில் இருக்கிறார்கள். ஒரே வயதுடையவர்களாக இருக்கிறார்கள். பாடத்தோழர்களாக உள்ளனர். ஒரே அந்தஸ்தில் உள்ளனர். ஒரே துறையில் பணியாற்றுகின்றனர் எனில் அவர்களில் யாருக்காவது அல்லாஹ்வின் நிஃமத் அதிகமாகிவிடுமேயானால் மற்றவருக்கு 'இது' உள்ளத்தில் ஏற்படுகிறது. இந்த ஒத்த வயதும் கூட பொறாமையின் காரணமாகிறது. இதற்கு **(Professional Jalousy)** என்று சொல்கிறார்கள்.

ஒவ்வொரு துறையில் உள்ள மனிதர்களுக்கு மத்தியில் இந்த பொறாமை உருவாகும். எதுவரையெனில் கல்வித் துறையில் யாரேனும் உள்ளார். அவருக்கு தங்களுக்கிடையில் பொறாமை ஏற்படும். அரபி கவிதையை கூறுகிறேன். நமது சில பெரியார்கள் கூறினர்.

لولا الحسد فى العلماء لصاروا بمنزلة الانبياء

தர்ஜுமா : உலமாக்களுக்கிடையியே பொறாமை மட்டும் இல்லையெனில் நபிமார்களின் அந்தஸ்த்தை அடைவர்.

அறிவுடையவருக்கு சாடை போதும் பெரும்பாலும் நாம் பார்த்துள்ளோம். அலுவலகங்களில் ஒரே அந்தஸ்தில் பணிபுரிபவர்களிடையே நிறையபேர் உள்ளனர். மாஷா அல்லாஹ் இதற்குப் பெயரே அவர்கள் 'காலை வாருதல்' என்று வைத்துள்ளனர். யாராவது நன்றாக வேலை பார்த்தால் மற்றவர் அவரை 'காலை வாருவதில்' ஈடுபட்டுவிடுகிறார்.

இதற்கு ஒரு நடைமுறை உதாரணமாவது:-

ஒரு நண்டு விற்பனையாளர் வாய்திறந்த பெட்டியில் அவற்றை வைத்திருந்தார். நிறைய நண்டுகள் உள்ளே சுற்றிக் கொண்டிருந்தன. ஒருவர் பார்த்து விட்டு இவை ஓடிப் போய்விடாதா? என்று கேட்டார். அவர் 'ஒன்றும் கவலைப்பட வேண்டியதில்லை. இவை வெளியே வரவே முடியாது' ஏன்? 'என்ன நடக்கிறது என்று நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்' என்று அவர் சொன்னார். அவர் பார்த்தபோது அவற்றில் ஒன்று பெட்டியை விட்டு வெளிவர முயற்சித்த போது இரண்டு நண்டுகள் சேர்ந்து அதன் தொடையை பிடித்து வாரிவிட்டன. பொறாமைப்படும் மனிதன் யாருக்கு அல்லாஹ் நிஃமத் கொடுத்துள்ளானோ அவனிடம் இப்படியே நடந்து கொள்கிறான்.

# பொறாமையின் நஷ்டங்கள்

பொறமை காரணமாக அல்லாஹுதஆலாவின் அதிருப்தி மற்றும் மறுமையின் நஷ்டம் என்னவோ கிடைக்கத்தான் போகிறது. ஆனால் உலகிலேயே அதன் நஷ்டங்கள் எதிர்வருகின்றன. சொன்னார்கள்:-

* முதல் நஷ்டம்: அடியானுக்குள் கைசேதம் (Depression) டிப்ரேஷனால் தாக்கப்படுகிறான்.

* இரண்டாம் நஷ்டம்: எந்த அடியான் பொறாமைக் காரனாகிறானோ அவன் எப்பொழுதும் மற்றவர்களின் பார்வையில் தனது அந்தஸ்த்தை விட்டும் தாழ்ந்து விடுகிறான்.

* மூன்றாம் நஷ்டம்: மக்களின் அதிருப்தி அவனுக்கு

கிடைக்கிறது. மக்களின் மனதில் அவனுக்கான அன்பு உருவாகுவதில்லை.

* நான்காவது நஷ்டம்: பல்வேறு தீமைகளை உருவாக்குகிறது. பெரிய பெரிய தீமைகளின் பிறப்பிடம் பொறாமையாகும்.

* ஐந்தாம் நஷ்டம்: உள்ளத்திற்குள்ளே குரோதம் உருவாகிவிடுகிறது.

இப்போதுதான் தெரியவருகிறது. இதில் இவ்வளவு நஷ்டங்கள் இருப்பதால்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "اياكم والحسد" பொறாமையை உங்களுக்கு எச்சரிக்கிறேன் என்று கூறினார்கள். மேலும் நீங்கள் பொறாமைப்படாதீர்கள் "لاتحاسدوا" என்றும் கூறினார்கள்.

பொறாமையிலிருந்து சீர்திருத்தம் எவ்வாறு உண்டாகும்? இப்போது இந்த நாசகார நோயை எவ்வாறு அப்புரப்படுத்துவது? என்ற கேள்வி பிறக்கிறது.

## பாதுகாவல் தேடுதல்

யாரைப் பற்றியாவது பொறாமையின் தன்மை நமது மனதில் உருவானால் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேட வேண்டும். "யா அல்லாஹ்! இது என்ன, எனது உள்ளத்தில் நோய் உருவாக்கிவிட்டதே! நான் உன்னிடத்தில் பாதுகாவல் தேடுகிறேன்!" என்று 'அல்லாஹ்வின் உதவி கிடைத்துவிட்டால் அவனுக்கு உள்ளிருந்து பொறாமையின் நோய் தெறித்து ஓடிவிடும்'

என்ற நம்பிக்கை உள்ளது.

2. இறையச்சம்

இரண்டாவது தக்வாவை உருவாக்கிக் கொள்ள வேண்டும். யாரைப் பற்றியாவது மன இறுக்கம், பொறாமையின் தன்மை இருந்தால் அதை பற்றி “அல்லாஹ் எனது உள்ளத்தின் நிலைகளை அறிகிறான். யார் யாரைப் பற்றியாவது தீங்கை நாடுவேனேயானால் அல்லாஹ் என்னிடம் அதிருப்தி அடைந்து விடுவான்” என்று பயப்பட வேண்டும். மரணத்தை நினைப்பது மறுமையின் கவலை, அல்லாஹ்வின் முன் கொண்டு நிறுத்தப்படுவோம் என்ற பயம், இவை அனைத்தும் ஒரு அடியானுக்கு ஏற்பட்டுவிடுமேயானால் இவை அவனை மற்றவர்களின் பால் பார்க்கவும் விடமாட்டா. இவற்றின் காரணமாக தன்னைப் பற்றிய சிந்தனை எவ்வளவு அதிகரித்து விடுமெனில் அடுத்தவர்களைப் பற்றி சிந்திப்பதற்கே சந்தர்ப்பம் ஏற்படாது.

3. பொறுமை

ஒரு பொறுமை கொள்ளும் அடியானும் பொறாமையின் நோயிலிருந்து தப்பித்துக் கொள்கிறான். அவன் மற்றவர்கள் தரும் தொல்லைகளை சகித்துக் கொள்ளக்கூடியவர்களாக இருப்பானேயானால் யாரைப் பற்றிய தேவையற்ற கெட்ட எண்ணம் அல்லது அதிருப்தி, அல்லது பொறாமை, அவனது உள்ளத்தில் உருவாகவே செய்யாது.

4. விதியைப் பொருந்திக் கொள்ளுதல்

அடியான் அல்லாஹ்வின் விதியை பொருந்திக் கொள்பவனாக இருப்பானேயானால் பொறாமையின் உறுத்தங்கள் உருவாக மாட்டாது. ஒரு அடியான் “அல்லாஹ்

ரப்புல் இஜ்ஜத்தினுடைய பங்கு பாகம் மற்றும் யாருடைய விதியில் அவன் எவ்வளவு விதித்து வைத்துள்ளானோ அது அவனுக்குக் கிடைக்கத்தான் வேண்டும்'' என்பதை புரிந்து வைத்திருப்பானேயானால் யாருடைய எந்த அருட்கொடையைப்பற்றிய ஆட்சேபனையும் அவனுக்கு உருவாகமாட்டாது.

5. தியானத்தைக் கடைப்பிடித்தல்

நமது பெரியார்கள் பொறாமை நோய் மறைவின் நுட்பத்துடன் தொடர்புடையதாகும். எப்போது ஒரு அடியான் மறைவின் நுட்பத்திற்காக பாடம் கற்கிறானோ மேலும் அதிகமதிகம் தியானத்தை கடைப்பிடிக்கிறானோ இந்த நோயிலிருந்து உயிர் விடுபட்டுவிடுகிறது. பிறகு அடியானுக்கு தன்னைப் பற்றிய சிந்தனை எந்த அளவிற்கு ஏற்பட்டு விடுகிறதென்றால் மற்றவர்களின் நிலைமைகளைப்பற்றி சீர்தூக்கிப்பார்ப்பதை விட்டும் தடை ஏற்பட்டு விடுகிறது. இதனால் உள்ளத்தில் யாரைப்பற்றியும் பொறாமையின் உறுத்தங்கள் ஏற்படவே செய்யாது என்று கூறியுள்ளார்கள். ஆனால் இந்த நோயை தாரமாக்குவதற்கு இது ஒரு ரகசியப் பாதையாகும். ஆனால் இந்த பாடம் யாராவது பரிபூரணமான ஷெய்கின் நிழலின் கீழ்தான் கிடைக்க முடியும்.

# பொறாமையின் நடைமுறை சிகிச்சை

நமது பெரியார்கள் இதற்கு மிகச் சுலபமான சிகிச்சையை காண்பித்துள்ளார்கள். கொஞ்சம் கவனமாகக் கேளுங்கள்! அடியான் தனது உள்ளத்தில் 'எனக்கு இன்னாரைப் பற்றிய பொறாமை இருக்கிறது. நெருப்பு பற்றுகிறது. இது மற்றவர்களுக்கு நன்றாகப் பட்டாலும் எனக்கு மன

இறுக்கத்தை ஏற்படுத்துகிறது' என்று உணர்ந்தால்..... பொறாமையின் இந்த வடிவிற்கு மாற்றம் செய்யுங்கள். எவ்வாறு? பொறாமையின் காரணமாக மனிதனின் உள்ளம் அவனைப் பற்றி புறம் பேச விரும்புகிறது. நீங்கள் புறம் பேசும் இடத்தில் அவனைப் புகழுங்கள். இது பொறாமையின் எதிர்ப்பதமாகும்.

எந்த வேலையை உள்ளம் செய்ய விரும்புகிறதோ அதை எதிர்த்து மாறு செய்யுங்கள். புறம் பேச உள்ளம் விரும்பினால் புகழ்ந்துரையுங்கள். அவனுடன் முரண்டுபிடிக்க மனம் விரும்பினால் பணிவு காட்டுங்கள். அவனுடன் நட்பு கொள்ளுங்கள். மேலும், அவனுடைய அருட்கொடைகள் அவனை விட்டும் பிடுங்கப்படவேண்டும் என்று மனம் விரும்பினால் 'நீங்கள் அன்பளிப்பு மற்றும் வெகுமதிகளுடன் அவன் வீட்டு வாசலை அடைந்து விடுங்கள். அவனுக்கு அன்பளிப்பு தாருங்கள்' என்று.

இப்படித்தான் ஹழ்ரத் தானவீ (ரஹ்) அவர்களுக்கு ஒருவர் எழுதினார். "ஹழ்ரத்! எனக்கு இன்னாரைப் பற்றி பொறாமை உள்ளது" என்று. ஹழ்ரத் அவர்கள் இதே போன்ற ஒரு சிகிச்சையை அவருக்கு பதிலாக எழுதினார்கள். "நீங்கள் அன்பளிப்பு எடுத்துக் கொண்டு அவர் வீட்டிற்கு செல்லுங்கள். அவருடன் அன்பு பாராட்டுங்கள்!" சில மாதங்களுக்குப் பிறகு அவர் கடிதம் எழுதினார். 'ஹழ்ரத்! பொறாமை நோய் எனது உள்ளத்திலிருந்து முற்றிலும் ஒழிந்துவிட்டது' என்று.

இதில் வேறொரு விஷயத்தையும் இணைத்துக் கொள்ளுங்கள்! அது என்னவெனில் யாருடன் பொறாமை

ஏற்பட்டதோ அவருக்காக துஆச் செய்யுங்கள். யா அல்லாஹ்! அவருக்கு மேலும் மேலும் நிஃமத் வழங்குவாயாக! என்று இது எப்பேர்பட்ட சிகிச்சை வடிவமெனில் தாங்கள் இரண்டு நாட்கள் அவருக்காக துஆ செய்தால் உள்ளத்திலிருந்து முற்றிலும் பொறாமை காலியாகிவிடும். யா அல்லாஹ்! நான் உனது திருப்தியின் மீது திருப்தியாக உள்ளேன்! அவருக்கு மென்மேலும் வழங்குவாயாக! ஒரு நாளிலே அந்த அடியானுக்காக துஆ செய்து கொள்ளுங்கள். போதும் இந்த துஆ பொறாமைக்கு இன்ஷா அல்லாஹ் மருந்தாக ஆகிவிடும். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் நம்மை இந்த மாபெரும் பாவத்திலிருந்து பாதுகாத்து நல்லுதவி செய்வாயாக!

# ஓர் உர்து கவிதை

حسد کے آگ سے کیوں جل رہے ہو
کفِ افسوس تم کیوں جل رہے ہو
خدا کے فیصلے پر کیوں ہو ناراض
جہنم کے طرف کیوں چل رہے ہو

பொறாமையின் தீயில் ஏன் எரிந்து கொண்டிருக்கிறீர்கள். கவலையின் கைகளை ஏன் பிசைந்து கொண்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் தீர்ப்பின் மீது ஏன் அதிருப்தியாகிறீர்கள். நரகின் பக்கம் ஏன் சென்று கொண்டிருக்கிறீர்கள்.

وآخر دعوانا ان الحمد لله رب العالمين

# ஹள்ரத் பீர் ஸாஹிப் அவர்களின் சீரிய உரைகளில் வெளியீடுகள்

1. بدنظری کے نقصانات (اردو)

( தமிழில் - تمل )

2. அந்நிய பெண்களை பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்கள்

3. ( ஆங்கிலத்தில் - انگریزی )
SIN OF THE EYE

இச்சிறு நூல் தெலுங்கு மொழியிலும் கிடைக்கும்

4. معلومات یومیہ (نقشبندیہ)

( தமிழில் - تمل )

5. அன்றாட அமல்கள் (நக்ஷ்பந்தி)

6. گناہوں کے نقصانات (تمل)

பாவத்தின் பாதிப்புகள்

7. رب غفار کا گنہ گاروں سے پیار (تمل)

பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

## ஹஸ்ரத் பீர் ஸாஹிப் அவர்களின்
## சீரிய உரைகளில் வெளியீடுகள்

1. بدنظری کے نقصانات (اردو)

( தமிழில் - ٹمل )

2. அந்நிய பெண்களை பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்கள்

3. ( ஆங்கிலத்தில் - انگریزی )

SIN OF THE EYE

இச்சிறு நூல் தெலுங்கு மொழியிலும் கிடைக்கும்

4. معلومات یومیہ (نقشبندیہ)

( தமிழில் - ٹمل )

5. அன்றாட அமல்கள் (நக்ஷ்பந்தி)

6. گناہوں کے نقصانات (ٹمل)

பாவத்தின் பாதிப்புகள்

7. رب غفار کا گنہ گاروں سے پیار (ٹمل)

பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்